has been recently sanctioned. A proposal for extension of spurs in both sides of Wards Nos. 3, 4, 6 and 7 in the Hospital so as to provide more accommodation for in-patient treatment is under consideration.

With regard to the Government Stanley Hospital, the bed strength was increased from 724 to 800. There is also a proposal to construct a three-floor men chronic medical block of 90 beds.

With regard to the Government Hospital of Integrated Medicine, the bed strength was increased from 210 to 270. Like that, there is some increase in other hospitals also.

SRI A. A. RASHEED : Has any extension been made in the Mental Hospital?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir. In the Government Mental Hospital, the bed strength was increased from 888 to 1,800.

SRI K. B. S. MANI : இம்மாதிரி சென்னை நகரத்தில் ஆஸ்பத்திரியை விஸ்தரிக்க வேண்டிய அவசியம் ஜனத்தொகை காரணமா, அல்லது சென்னைக்கு வந்து போகிற ப்ளோட்டிங் ஜனத்தொகை காரணமா அல்லது ப்ளோட்டிங் ஜனத்தொகையால் ஏற்படுகிற வியாதிகள் அதிகமாவதன் காரணமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : ஜனத்தொகை அதிகமாக இருப்பதன் காரணம்தான். ப்ளோட்டிங் ஜனத்தொகை சென்னைக்கு அதிகமாக வந்து போவதன் காரணமும்தான். அதனுல் அதிக வியாதிகள் ஏற்படுவதும் காரணமாக இருக்கிறது.

*Pest attack on paddy crops*

* 708 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the extent of paddy crops affected by pest in October and November 1958 in the Lalgudi taluk, Tiruchirappalli district;

(*b*) the measures taken to fight this menace;

(*c*) whether there is any proposal to provide every District Agricultural Officer with at least 200 sprayers to be given on hire to ryots;

(*d*) if not, whether there is any other scheme with the Government to solve the scarcity of sprayers; and

(*e*) whether there is any proposal to award prizes to officers who have taken prompt action for the effective control of the pests?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) *to* (*e*) The answer[a] is placed on the table of the House.

SRI S. LAZAR : அதற்குப் பிறகு பெரும் அளவில் பாதிக்கப் பட்டிருக்கிறது என்ற முறையில் சலுகைகள் வேண்டுமென்று கேட்கிற வர்களுக்கு சலுகைகள் என்ன வழங்கப்பட்டிருக்கிறது என்பதை அறிவிக்க முடியுமா ?

---

[a] Printed as Appendix V on pages 95 infra.

11th March 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பூச்சி மருந்துகளை குறைந்த விலைக்கு அதாவது பாதி விலைக்குக் கொடுக்கப்பட்டு வருகிறது.

SRI M. KALYANASUNDARAM : இவ்வளவு அதிகமான அளவில் இந்த நோய் பரவுவதற்குக் காரணங்கள் என்ன என்பது ஆராயப் பட்டனவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வப்போது ஆராயப் பட்டு வருவது அல்ல. அதைத் தடுப்பதற்கு எல்லாவித அவசியமான நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. விவ சாய இலாகா முன்னமேயே அதைத் தெரிந்துகொள்ள முற்படுகிறார்கள். அப்படி தெரிந்துகொண்டும் வருகிறார்கள். சில சமயங்களில் இயற்கை யாகவே பரவலாக வந்துவிடுகிறது. அப்பொழுது ஒன்றும் செய்ய முடிவ தில்லை. மருந்துகள்தான் போடப்படுகிறது.

SRI S. LAZAR : இந்த வருஷம் அதிகமாக இருந்தபோதிலும் சென்ற வருஷமும் இதைப்போல் பாதிக்கப்பட்டிருக்கிறது. இப்படி நாலைந்து வருஷங்களாக பாதிக்கப்பட்டுக்கொண்டு வருகிறது. அதனால் கோயம்பத்தூர் ரிசர்ச் ஸ்டேஷனில் ஒரு பிரிவை இங்கே வைத்து அதைப் பற்றி ஆராய்ச்சி செய்து அதன் மீது ஒரு முடிவு எடுக்கும் அளவில் அரசாங்கம் நடவடிக்கை எடுக்க முன் வருமா என்பதை அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பொதுவாக இந்த பூச்சி விபத்துக்களை தடுப்பதற்கு அரசாங்கம் வேண்டிய கவனம் செலுத்திக் கொண்டு வருகிறது. விசேஷமாக கவனம் செலுத்த வேண்டிய அவசியம் இல்லை.

SRI A. GOVINDASAMY : போதுமான ஸ்ப்ரேயர் கிடைக்காத காரணத்தாலும், ஒரு சில விவசாயிகள் அவைகளை சரியான முறையில் கையாளாத காரணத்தாலும் சிலர் இறக்கும்படியான நிலைமை ஏற்படுகிறது என்பது அரசாங்கத்தினுடைய கவனத்திற்கு வந்திருக்கிறதா ? அதனால் போதுமான ஸ்ப்ரேயர்களை விநியோகிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தந்த மாவட்டங் களில் ஒரு சில ஸ்ப்ரேயர்கள் வைக்கப்பட்டிருக்கிறது. சில இடங்களில் ரிசர்வ் ஸ்டாக் வேறு வைக்கப்பட்டிருக்கிறது. வேண்டுமென்று கேட்கிற வர்களுக்கு அந்த ரிசர்வ் ஸ்டாக்கிலிருந்தும் கொடுக்கப்பட்டு வருகிறது.

SRI S. NAGARAJA MONIGAR : இந்த பூச்சி அரிப்பு என்பது எவ்வளவு காலமாக இருக்கிறது, இப்பொழுதுதான் வந்ததா அல்லது பழைய காலத்திலிருந்து இருந்துகொண்டிருக்கிறதா ? அப்படி பழைய காலத்திலிருந்தே இருந்துகொண்டிருந்தால் பழைய காலத்தில் அதைத் தடுப்பதற்கு என்ன முறையைக் கையாண்டு வந்தார்கள். அந்த முறையை என் இப்பொழுதும் கையாளக்கூடாது என்பதாகக் கேட்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பூச்சி தொல்லை என்பது புதிது அல்ல. பழைய காலத்திலிருந்தே எல்லா இடங்களிலும் இருந் திருக்கிறது. விவசாயத்தில் முன்னணியில் இருக்கக்கூடிய ஜப்பானில்கூட பூச்சித் தொல்லை இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். பூச்சி தொல்லை அவர்களைக்கூட விட்டபாடில்லை என்றும் அதை நாள்தோறும் சமாளிக்க வேண்டியதாக இருக்கிறது என்றும் சொல்லுகிறார்கள்.

SRI K. VINAYAKAM : Sir, since the operation of spraying these insecticides over pests involves a tedious process, will the Government consider the possibility of spraying from the sky by means of helicopters, as it is done in foreign countries.

[11th March 1959

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நம் நாட்டில்கூட அப்பபடிப்பட்ட எரோப்ளேன் இருக்கிறது. அது மத்திய சர்க்காரிடம் இருக்கிறது. அதிகமான பரப்புள்ள நிலங்களுக்குத்தான் அதை உபயோகித்து பிரயோசனப்படுத்தலாமேயொழிய 60 அல்லது 70 ஏக்கர் பரப்புள்ள நிலங்களுக்கு அது பிரயோசனம் இல்லை. அதற்கு அப்படிப் பட்ட எரோப்ளேனை உபயோகப்படுத்த முடியாது.

SRI T. KARIA GOUNDER : இந்த பூச்சி இப்படி பரவுவதற்கு ரசாயன உரம் போடுவதுதான் காரணமா, அதுதான் காரணம் என்று பேசப்படுகிறது. இதைப்பற்றி அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அப்படி இருந்தால் அதைப்பற்றி என்ன ஆராய்ச்சி செய்யப்பட்டிருக்கிறது. அதற்கு என்ன ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ரசாயன உரம் போடுவதால பயிர் செழிப்பாக வளருகிறது. பயிர் செழிப்பாக இருந்தால் அதற்கு பூச்சி வருகிறது. அந்த வகையில் தான் பூச்சி வந்து பரவுகிறது.

*Sale of pesticides*

* 709 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Home be pleased to state the amount allotted for the sale of pesticides at concession rates for each district in 1958–59?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The answer[a] is placed on the table of the House.

SRI A. GOVINDASAMY : கடலூர் ஜில்லா விவசாய ஆபீசுக்கு அதிகப்படியான தொகை ஒதுக்கப்படவில்லை என்று தெரிய வருகிறது. அதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி தனி கேள்வி கேட்டால் நான் பார்த்து பதில் சொல்லுகிறேன். அது எனக்கு இப்பொழுது புரியவில்லை.

SRI A. A. RASHEED : In the statement placed on the table of the House, I find that there is an original allotment of only Rs. 10,000 for North Arcot district. May I know why no additional allotment has been made for that district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, if there is need, additional allotment is made. If there is no additional allotment made, it means that there is no large scale damage on account of pests.

SRI A. GOVINDASAMY : தேசீய விஸ்தரிப்பு திட்டம் இருக்கும் பகுதிகளில் இதை குறைந்த விலைக்குக் கொடுக்க ப்ளாக் டெவலப்மெண்ட் அதிகாரிகள் மூலமாக வழங்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீசர்கள் விவசாய இலாகாவுடன் ஒத்துழைத்து எந்த வசதிகளையும் பெற்றுக்கொள்ளலாம்.

SRI S. M. ANNAMALAI : அதிகாரிகளுக்கு ஏதாவது கோரிக்கை வந்தால் இந்த பூச்சி மருந்துகளை இனமாகக் கொடுக்க முன் வருவார்களா? ஒரு நிலத்திற்கு பூச்சி மருந்தை அடித்தால் அந்த நிலத்திலிருந்து

---

[a] Printed as Appendix VI on page 96 infra.